REGD No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 4 பக்கம் விலை 35 காசு










❋ மலர்: 4 சென்னை 12 9 80 வெள்ளி (★) ❋❋❋ (★) வெளியூர்: 13 9 80 சனி இதழ் 305 ❋

அமைச்சர் ஹண்டே பார்த்தார்

## கல்யாண சுந்தரம் மருத்துவ மனையில் அனுமதி

சென்னை, செப். 12- இந்திய கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் எம். கல்யாண சுந்தரம் எம். பி. வயிற்று வலி காரணமாக சென்னை, ஜெனரல் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டுள்ளார்.

சில நாட்களாக வயிற்று வலியால் அவதிப்பட்டு தனியார் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வந்த அவர், மருத்துவர்கள் ஆலோசனையின்படி ஜெனரல் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார்.

அவரது வயிற்றில் ரத்தநாளத்தில் கட்டி இருப்பதாக பரிசோதனையில் தெரிய வந்துள்ளது. அவர் உடல் நிலை பலவீனமாக இருப்பதால் உடனடியாக அறுவை சிகிச்சை செய்ய முடியாது என்று டாக்டர்கள் கருதுகின்றனர்.

அமைச்சர் டாக்டர் ஹண்டே அழகிரிசாமி எம் எல் ஏ ஆகியோர் மருத்துவமனையில் அவரை நலம் விசாரித்தனர்.



தன்னிடம் உள்ளதாக மனோகரன் அறிவித்த

# நக்சல் பாரிகள் பட்டியல் எங்கே?

புரட்சித்தலைவர் கேள்விக்கணை



"தானாகத்தராவிட்டால் அதிகாரிகள் போய் முறைப்படி தெரிந்துகொள்வர்"

மதுரை, செப். 12- நக்சல்பாரிகளின் பட்டியல் தன்னிடம் இருப்பதாக கூறிய மனோகரன் அதை உடனடியாக காவல் துறையிடம் அளிக்க வேண்டும் என முதலவர் புரட்சித்தலைவர் கூறினார். அவ்வாறு அவர் பட்டியலை தானே முன் வந்து அளிக்காவிட்டால் அதிகாரிகள் போய் முறைப்படி தெரிந்து கொள்ளுவார்கள் எனவும் முதல்வர் புரட்சித்தலைவர் கூறியுள்ளார்.

மதுரையில் நடந்த 'மக்கள் குரல்' 7-வது ஆண்டுவிழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் பங்கேற்று ரோட்டரி எந்திரத்தை துவக்கிவைத்தார்.

அமைச்சர் ஆர் எம் வீ தலைமையில் இந்த விழா நடந்தது.

பிராசசிங் காமிராவை அமைச்சர் கே ஏ கே. துவக்கி வைத்தார்.

இவ்விழாவில் மதுரை முன்னாள் மேயர் முத்து, மேயர் பாலகிருஷ்ணன், துணைமேயர் நவநீதகிருஷ்ணன் தொழிற்சங்கத் தலைவர் குருமூர்த்தி யூகோ பாங்க் மேலாளர் நாகராஜன், டி. ஆர், ராமசாமி ஆகியோர் பங்கேற்றனர்

முதல்வர் புரட்சித்தலைவரும், அமைச்சர்களும் 'மக்கள் குரல்' அலுவலகத்தை சுற்றிப் பார்த்தனர்.

ரோட்டரி அச்சு எந்திரத்தை துவக்கிவைத்து முதல்வர் புரட்சித்தலைவர் பேசுகையில் கூறியதாவது

தனிப்பட்ட ஒரு பத்திரிகை தான் நாட்டில் இருக்கவேண்டும் என்றால் நல்ல கருத்துகள் வெளிவராது. அதுபோல் நாட்டில் கழகம் மட்டும் இருந்தால் அது சர்வாதிகாரமாக மாறுமே தவிர ஜனநாயகமாக இருக்க முடியாது. அறிவை ஏதோ ஒரு சூழ்நிலையில் பயன்படுத்தி விலைக்கு வாங்கி விட முடியும் என்ற மற்றவர்களின் கருத்தைப் போல எங்கள் கருத்து இல்லை என்பதைக் கூறிக்கொள்ளுகிறேன்

டி. ஆர். ஆர் ஓர் கருத்தை கூறினார். சர்வாதிகாரி இட்லர் தன் எண்ணங்களை வெளியிட பயன் படுத்தப் பட்ட எந்திரம் என குறிப்பிட்டார்கள்

### சர்வாதிகாரத்தை ஒடுக்க...

அந்த எந்திரம் புதைக்கப்பட்டு பிறகு தோண்டி எடுக்கப்பட்டு ஒன்று அலகாபாத்திற்கும். மற்றொன்று நவமணிக்கும் வந்ததாக குறிப்பிட்டார் அந்த எந்திரம் மதுரையில் பயன்படப் போவது கண்டு மகிழ்ச்சியடைகிறேன்.

ஒரு சர்வாதிகாரி சிறைச்சாலையில் இருந்து பிறகு விடுதலையாகி ஆட்சிக்கு வந்த பிறகு தன்னையார் ஆதரித்தார்களோ, அவர்களை சுட்டுத் தள்ளினான் அப்படி சுட்டுத் தள்ளிய இட்லர் பயன்படுத்திய இந்த இயந்திரம் இங்கு சர்வாதிகாரத்தை ஒடுக்க பயன்படப் போகிறது.

இங்கு ஒரு சர்வாதிகாரியைப் பற்றி குறிப்பிட்டு பேசினார்கள். அவர் யார் என்பதை நீங்கள் அறிவீர்கள்.

அந்த சர்வாதிகாரி இட்லரைப்போல், செயல்பட்டதையும் இங்கு எடுத்துச் சொன்னார்கள். அதிகாரத்தில் அமர்ந்து கொண்டிருந்த அவர்கள் நாட்டுமக்களுக்கு தொண்டு செய்த தொழிலாளர்களின் கூட்டத்தை வெளியேற்றி விட்டு அதற்கு பிறகு தனக்கு சாதகமானவர்களை அந்த பத்திரிகையில் அமர்த்தி தனக்கு சாதகமான செய்திகளை வெளியிடச் சொல்லி பிறகு அந்தப் பத்திரிகையை மூடிவிட்டார்கள்.

அந்த சர்வாதிகாரிகள் ஆட்சிக்கு வந்திருப்பார்களே ஆனால் இந்த அச்சு இயந்திரத்தை இயங்க செய்யாமல் மட்டுமல்ல மனிதர்களையே நடமாட விடாமல் செய்திருப்பார்கள் அதற்குள் மக்களாகிய நீங்கள் நல்ல காரியங்களை செய்துள்ளீர்கள்.

மக்கள் தேர்தலில் எச்சரிக்கையாக நடந்ததன் விளைவு இந்த விழா நடக்கிறது.

அவர்கள் ஆட்சி வந்திருந்தால இந்த விழா நடந்திருக்குமா?

நான் ஒன்றை குறிப்பிட விரும்புகிறேன். அதைக் குறிப்பிட்டால் எங்கே என் இனிய நண்பர் நாவுக்கரசருக்கு கோபம் வந்துவிடுமோ என பயமாக உள்ளது.

துப்பாக்கி வைத்துக் கொண்டிருப்பவர், தன்னிடம் துப்பாக்கி உள்ளதாக, அதுவும் அவர்களுடைய மாநாட்டில் சொல்லியுள்ளார். அவ்வாறு அவர்களுடைய மாநாட்டில் சொல்ல வேண்டியதில்லை.

முதல்வர் என்ற முறை

(2-ம் பக்கம் பார்க்க)

## உண்ணாவிரதம் இருந்த அவசரக்காரர்கள்: புரட்சித்தலைவர் தாக்கு

மதுரை, செப். 12- ஐந்து ஆண்டில் நிறைவேற்றவேண்டிய வாக்குறுதிகளை ஆட்சிக்கு வந்த 3 மாதத்திலேயே அவசரப்பட்டு நிறைவேற்றுமாறு தி மு கவினர் உண்ணாவிரதம் இருந்தது பற்றி புரட்சித் தலைவர் குறிப்பிட்டார்.

மதுரையில் யுனைட்டட் கமர்ஷியல் பாங்கின் புதிய கிளையை முதல்வர் புரட்சித்தலைவர் திறந்து வைத்தார். விழாவுக்கு வேளாண்மைத்துறை அமைச்சர் கா காளிமுத்து தலைமை வகித்தார்.

விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசுகையில் கூறியதாவது:-

அரசாங்கம் மக்களின் வரிப்பணத்தில் நல்லதிட்டங்களை தீட்டி செயல்படுத்திவருகிறது.

இங்கே பேசிய கலெக்டர் கடந்த ஆண்டில் அரசு செய்த சாதனைகளை விவரமாக எடுத்துச்சொன்னார்.

அவர் நினைவூட்டவில்லை. நடந்த சாதனைகள் அவை- எல்லோரும் அறிந்ததையே சொன்னார். இப்படிப்பட்ட சாதனைகளை எல்லாம் அரசு செய்து வருகிறது.

### அரசமரமும் அடிவயிறும்...

ஆனால் அரசு செய்யும் காரியங்களை எல்லாம் மறந்து அது பற்றியெல்லாம் நினைக்காமல் நினைவூட்டுவதற்கு என்று சொல்லிக்கொண்டு சிலர் உடல் நலத்தைக் கெடுத்துக் கொண்டு உண்ணாவிரதமிருந்தனர்.

அரசமரத்தைச் சுற்றி விட்டு அடி வயிற்றை...

(பலத்த சிரிப்பு)

நாங்கள் ஆட்சிக்குவந்து 3 மாத காலம்தான் ஆகிறது. இன்னும் சரியாகச் சொல்வதானால் 3 மாதம் 2 நாள்தான் ஆகிறது. என்றாலும் 169 லட்ச ரூபாய்க்கு புதிய திட்டங்களைத்தீட்டி நிறைவேற்றி வருகிறோம்.

### உண்ணாவிரதம்

ஆனால் 3 மாதத்திலேயே எங்களுக்கு நினைவுபடுத்தியதற்காக நாங்கள் நன்றியை செலுத்திக் கொள்கிறோம்.

அவர்கள் ஞாபக மறதியாக எதையாவது விட்டிருந்தால் ஞாபகப் படுத்த நாங்களும் உண்ணாவிரதம் இருக்க முடியாதா? அப்படி இருந்தால் அதை நாடு ஏற்காதா? ஏற்கும்.

இதை மக்கள் நன்றாக புரிந்து கொள்வார்கள்.

ஒரு திட்டம் எப்படி செயல்படுகிறது என்பதை தெரிந்துக் கொள்ளக்கூடிய இடத்தில் இருப்பவர்கள், அவர்கள் உண்ணாவிரதம் இருந்தார்கள்.

ஏன் உண்ணாவிரதம் இருந்தார்கள் என்பதற்கு 5, 6 மாதம் கழித்து இதை விளக்குவார்கள். இப்போது விளக்கினால் அவர்கள் கட்சியின் கட்டுக் கோப்பு குலைந்துவிடும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

போலீசாரால் தேடப்பட்டு வந்த நக்சல் ஆதரவாளர்

## சுந்தரம் கோர்ட்டில் சரண்

சென்னை, செப். 12 காவல் துறையினரால் தேடப்பட்டு வந்த நக்சலைட் ஆதரவாளர் சுந்தரம் சென்னை செஷன்ஸ் கோர்ட்டில் நேற்று சரண் அடைந்தார்.

இவர் 'நீண்ட பயணம்' என்ற பத்திரிகையின் ஆசிரியர் ஆவார்.

திருப்பத்தூரில் நக்சலைட்டுகள் கைது செய்யப்பட்டதைகண்டித்து இவர் சென்னைப் பொதுக் கூட்டத்தில் பேசியதாக- அரசு ஊழியர் கடமை செய்ய முடியாதபடி தடுத்தது சம்பந்தமாக- சுந்தரத்தை போலீசார் தேடி வந்தனர்.

### விடுமுறை

'அண்ணா' அச்சிடும் அச்சகத்திற்கு நாளை (13-ந்தேதி) விடுமுறையாதலால், 'அண்ணா' நாளிதழின் அடுத்த இதழ் சென்னையில் 14-ந் தேதியும், வெளியூர்களில் 15-ந்தேதியும் வெளிவரும்.

-நிர்வாகி

ஜனதிபதி - முதல்வர்

புரட்சித்தலைவர் பங்கேற்கும்

## அண்ணா நினைவு இல்லத் திறப்புவிழா: ஏற்பாடுகள் தீவிரம்

காஞ்சிபுரம், செப்.12- அண்ணா நினைவு இல்லத் திறப்பு விழாவையொட்டி காஞ்சிபுரம் வரும் ஜனாதிபதி சஞ்சீவரெட்டிக்கும், முதல்வர் புரட்சித்தலைவருக்கும் பிரம்மாண்டமான வரவேற்பு அளிக்க காஞ்சிபுரம் நகர கழகம் தீவிர ஏற்பாடுகளை செய்து வருகின்றது.

காஞ்சிபுரத்தில் அண்ணா வாழ்ந்த இல்லத்தை அண்ணா நினைவு இல்லமாக தமிழக அரசு மாற்றி அமைத்துள்ளது.

இந்த நினைவு இல்லத் திறப்பு விழா செப்டம்பர் 16ந்தேதி காஞ்சிபுரத்தில் நடைபெறுகிறது.

அண்ணா நினைவு இல்லத்தை ஜனாதிபதி சஞ்சீவரெட்டி திறந்து வைக்கிறார் தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் இவ்விழாவில் கலந்து கொள்கிறார்.

இவ்விழாவை சிறப்பாக கொண்டாட காஞ்சிபுரம் நகர கழகம் முடிவு செய்துள்ளது.

இதற்கான நகரக் கழகக் கூட்டம் காஞ்சிபுரத்தில் நடைபெற்றது கூட்ட முடிவில் காஞ்சிபுரம் வரும் ஜனாதிபதிக்கும் தமிழகமுதல்வர் புரட்சித் தலைவருக்கும் பிரும்மாண்டமான வரவேற்பு அளிப்பது என்று முடிவு செய்யப்பட்டது.

இதற்காக காஞ்சிபுரத்தில் 40 இடங்களில் அலங்கார வளைவுகள் அமைக்கப் பட்டுள்ளன.

ஜனாதிபதியை வரவேற்கும் சுவரொட்டிகள் காஞ்சிபுரம் முழுவதும் ஒட்டப்பட்டுள்ளது. அண்ணா புரட்சித்தலைவர் உருவப் படங்கள் பல பகுதிகளில் வைக்கப்பட்டுள்ளன.

வரவேற்பு வேலைகளை சட்டமன்ற கழக உறுப்பினர் வெங்கட்ட சுப்பிரமணியம், காஞ்சி பன்னீர் செல்வம், கண்ணபிரான் மற்றும் பலர் செய்து வருகின்றனர்.

### கிளைக் கழக தேர்தல்: ஒரு திருத்தம

"கிளைக் கழக தேர்தல் முதல் கட்டம்" பற்றி நேற்று "அண்ணா" இதழில் வந்த பொதுச்செயலாளர் ப. உ. ச. அறிவிப்பில் "ஏழு செயற்குழு உறுப்பினர்கள் (இருவர் பெண்களாக இருத்தல வேண்டும்) தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்" என்பதை ஒன்பது செயற்குழு உறுப்பினர்கள் (அவர்களில் இருவர் பெண்களாக இருத்தல் வேண்டும) என்று திருத்தி வாசித்துக் கொள்ளவும்.

## பம்பாயில் அதிக சர்க்கரை கோரி அமைச்சருக்கு 90 நிமிடம் கேரோ

பம்பாய், செப். 12- அதிக சர்க்கரை கோரி மராட்டிய மாநில துணை அமைச்சர் ஒருவரை 90 நிமிடம் கேரோ செய்தனர். பிறகு போலீசார் வந்து அந்த துணை அமைச்சரை மீட்டனர்.

பம்பாயில் வெளிச்சந்தை சர்க்கரை விலை எக்கச்சக்கமாக ஏறிஇருக்கிறது.

பம்பாய்ப் பகுதியில் வெளிச்சந்தை சர்க்கரை விலை ரூ.15 வரை உயர்ந்திருப்பதாகக் கூறப்படுகிறது.

13-ம்தேதி (நாளை) விநாயகசதுர்த்திவருகிறது. இந்தப் பண்டிகைக்கு அதிக சர்க்கரை கோரி பாரதீய ஜனதா கட்சியின் யுவர் பிரிவு போராட்டம் நடத்தியது.

மராட்டிய சிவில் சப்ளை துணை அமைச்சர் கம்லி குருஜியை ஆர்ப்பாட்டக்காரர்கள் சூழ்ந்துகொண்டு கேரோ செய்தனர்.

முற்றுகை வாதிகளிடமிருந்து தப்ப வழி இல்லாமல் அமைச்சர் திணறினார்.

பிறகு போலீசார் வந்து துணை அமைச்சரை போராட்டக்காரர்களிடமிருந்து மீட்டனர். அதன் பிறகு மிகவும் பிரயாசைப் பட்டு ஆர்ப்பாட்டக் காரர்களை காவல் துறையினர் அப்புறப்படுத்தினார்கள்.

## ராஜ்நாராயணனுக்கு தேசாய் விதிக்கும் நிபந்தனைகள்

புதுடெல்லி, செப். 12- ஜனதாக் கட்சி உடைந்ததற்கு ராஜ்நாராயணன் பகிரங்கமாகப் பொறுப்பு ஏற்று மன்னிப்புக் கோர வேண்டும் என்று தேசாய் கூறி இருக்கிறார்.

தேசாய் தெரிவித்த தகவலை சுப்பிரமணியசாமி தெரிவித்துள்ளார்.

ராஜ்நாராயணன் அவரது கட்சியைக் கலைத்து விட்டு அந்தக் கட்சியில் இருப்பவர்களை விரும்பும் கட்சியில் சேர விட்டு விட வேண்டும் என்றும் தேசாய் கூறியிருப்பதாக சுப்பிரமணியசாமி தெரிவித்தார்.

கட்சிகள் இணைவதை மொரார்ஜி தேசாய் எதிர்ப்பதாகவும் கூறினார்.

மொரார்ஜி தேசாய் சார்பில் இந்த தகவல்களை தெரிவிப்பதாக சுப்பிரமணியசாமி தெரிவித்தார்.

ராஜ்நாராயணன் கட்சியில் இருந்து ஜனதாக் கட்சிக்கு வந்தால் அப்படி வருபவர்கள் ஜனதாக் கட்சியில் விசுவாசமாக இருப்போம் என்பதை உறுதி செய்ய வேண்டும். அப்படி வருபவர்களுக்கு எந்தப் பதவியும் தரப்படமாட்டாது.

தேசாயின் மகன் காந்திலால் மீது ராஜ்நாராயணன் பொய்க் குற்றச்சாட்டுக்களைத் தெரிவித்திருக்கிறார்.

இந்த விஷயத்திலும் ராஜ்நாராயணன் மக்களின் சந்தேகத்தைப் போக்க வேண்டும் என்றும் தேசாய் கூறியதாக சுப்பிரமணியசாமி கூறினார்

# 18 ஆண்டுகளுக்குப் பிறகு

# மீண்டும் இரைவை பாசன திட்டம்

## புரட்சிதலைவர் ஆட்சியில் புதிய முறையில் அமுல்

திருச்சி, செப். 12- 18 ஆண்டுகளாக முடங்கி இருந்த இரைவைப் பாசனத் திட்டம் புரட்சித்தலைவர் ஆட்சியில் மீண்டும் செயல்படத் தொடங்கியுள்ளது.

பெருந்தலைவர் காமராஜர் முதல்வராக இருந்த காலத்தில் இரைவை நீர்ப்பாசனத் திட்டத்தைச் செயல்படுத்தினர்.

காவேரி ஆற்றிலிருந்து பம்பு மூலம் விவசாயத்துக்குத் தண்ணீர்விடும் திட்டத்தை. செயல்படுத்த இரைவைப்பாசன கூட்டுறவுசங்கத்துக்குகாமராஜர் அனுமதி அளித்திருந்தார்.

பிற்காலத்தில்அந்தசங்கம் சரிவரச் செயல்படவில்லை. கருணாநிதி ஆட்சிக் காலத்தில் இத்திட்டத்திலும் ஊழல் நடந்தது.

காமராஜர் ஆட்சிக் காலத்தில் மட்டுமே செவ்வனே செயல்பட்டு அதன் பின் முடங்கிக் கிடந்த இத்திட்டம் பற்றி புரட்சித்தலைவர் ஆட்சியில் பரிசீலிக்கப்பட்டது.

சின்னச்சாமி எம் எல் ஏ இத்திட்டத்தை விரைவில் செயல் படுத்த முயற்சி எடுத்தார். சென்னையில் அமைச்சர் பொன்னையன் தலைமையில் இதற்கான கூட்டம் நடந்தது.

சின்னச்சாமி எம் எல் ஏ திருச்சி கலெக்டர் சீனிவாசன், நீர்ப்பாசனத்துறை தலைமைப் பொறியாளர் மணவாளன், கூட்டுறவுப் பதிவாளர் சுயம்பிரகாசம் ஆகியோர் கலந்து கொண்டனர்.

புகளூர் ஆற்றுநீர் இரைவைப் பாசன கூட்டுறவு சங்கம் அமைக்க முடிவு எடுக்கப்பட்டது. காவிரியில் இருந்து நீர் எடுத்து புஞ்சைபுகளூர், நடையனூர் பகுதி நிலங்களுக்கு பாசனத்துக்கு விடப்படும். இப்பகுதியிலுள்ள கரும்புக்கு பத்து மாதத்துக்கு இத்திட்டத்தின் மூலம் பாசன வசதி கிட்டும்.

மேலும் 3 இரைவைப் பாசனத் திட்டங்களும் பரிசீலிக்கப்படுகின்றன.

---

இன்ஸ்பெக்டர் பல்லை உடைத்ததாக

### ஆசாமிக்கு 18 மாத கடுங்காவல்

சென்னை, செப். 11- சென்னை புளியந்தோப்புப் பகுதியில் 23-10-78 ந் தேதி ரகளை நடப்பதாக அறிந்து, புளியந்தோப்பு போலீஸ் இன்ஸ்பெக்டர் வேதக்கண்ணு ஜீப்பில் சென்றார்.

அப்போது அவர்சென்ற ஜீப் மீது கல்வீசப்பட்டது. இதில் இன்ஸ்பெக்டரின் பற்கள் உடைந்தன.

இதையடுத்து உதயகுமார் என்பவர் கைதுசெய்யப்பட்டு, 3-வது உதவி செஷன்ஸ் கோர்ட்டில் வழக்கு தொடரப்பட்டது. அங்கு உதயகுமாருக்கு 18 மாத கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

மத்திய குற்றப் பிரிவு துணை இன்ஸ்பெக்டர் தங்கராஜ் இவ்வழக்கில் புலன் விசாரணை செய்தார்.

---

### ஆட்டோரிக்ஷா சங்கம் திறப்பு

கோவை, செப். 12- கோவை மாவட்ட அண்ணா ஆட்டோ ரிக்ஷா சங்கத் திறப்பு விழா ஏ. எம். சையது தலைமையில் நடைபெற்றது.

தமிழ்நாடு வேளாண்மைத் தொழில்கள் இணையகத் தலைவர் வியாகத் அலிகான் கொடியேற்றி வைத்து சிறப்புரையாற்றினார். இ. சண்முகம், மலரவன், புலிபாலு, சண்முகம், வெங்கடாசலம் ஆகியோர் கலந்துகொண்டனர்.

---

### 46-வது வட்டத்தில் கழகப் பொதுக்கூட்டம்

சென்னை, செப் 12-இன்று (12-ந்தேதி) வெள்ளிமாலை 7 மணிக்கு சென்னை 46-வது வட்டத்திலுள்ள ரங்க பிள்ளைத் தோட்டத் தெருவில் கழகப் பொதுக் கூட்டம் நடக்கிறது.

கே. பச்சையப்பன் தலைமை வகிக்கிறார்.

தலைமை நிலையச்செயலாளர் எம்.எஸ் அப்துல் காதர், திருவை அண்ணாமலை, வண்ணைகோவிந்தன் ஏ.வி. கிருஷ்ணமூர்த்தி,, மண்ணடி, கிருஷ்ணமூர்த்தி, எம் வி, ராமன், சி. சா. சுந்தரம்சி.ஜி.ராதாகிருஷ்ணன், கஜேந்திர பாபு, எஸ் ஜெகந்நாதன், ரவி, ரங்கன், அண்ணாதாசன், டி எஸ் சந்தானம் மற்றும் பலர் பேசுகின்றனா.

---

செயற்குழு தீர்மானம்:

### கழக ஆட்சிக்கு தமிழ்நாடு அரசு அலுவலர் கழகம் ஆதரவு

சென்னை, செப். 12- தமிழ்நாடு அரசு அலுவலர் கழக (சி, டி, பிரிவு)மத்திய செயற்குழு கூட்டம் சென்னையில் கூடியது.

மாநிலத் தலைவர் எம்.வி லட்சுமிநரசிம்மன், பொதுச் செயலாளர் கே. சு மோகன் டி சாரங்கபாணி மற்றும் 80 பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

மீண்டும் அமைந்திருக்கும் முதல்வர் புரட்சித் தலைவர் அரசுக்கு ஆதரவு தருவது என தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

---

### ராஜபாளையத்தில் நடக்கும் கழகக் கூட்டம்

ராஜபாளையம் செப். 12- ராஜபாளையத்திலுள்ள மதுரை ராசாகடைவீதியில் இம்மாதம் 16-ந் தேதி (செவ்வாய்) இரவு 7 மணிக்கு கழகப் பொதுக்கூட்டம் நடக்கிறது.

சின்னசாமி தலைமை வகிக்கிறார். மதுரை இளவரசன், பி.மொக்கையன் முகவூர் பெ. ரத்தினம் மா. குருசாமி, கோ. ராமச்சந்திரன், சிவகுருநாத பாக்கியம் வமு மாரிமுத்து சஞ்சீவி நாதன். அய்யாதுரை தி காளிமுத்து மற்றும் பலர் பேசுகின்றனர். செல்லையாநயினார் கலைநிகழ்ச்சி நடக்கிறது.

---

### பட்டியல் எங்கே?

(1-ம் பக்க தொடர்ச்சி)

யில் அவருக்கு ஓர் வேண்டுகோள் விடுக்க கடமைபட்டுள்ளேன். என் இனிய நண்பர் நாவுக்கரசர் நாஞ்சிலார் கழக அமைச்சரவையில் நிதியமைச்சராக இருந்தவர், முன்னவராக இருந்தவர். நல்லவர். பொய்பேசமாட்டார், பொய் பேசவராது, ஒத்துக் கொள்கிறேன்.

உங்களிடம் நக்சல்பாரிகளின் விலாசம் உள்ளதாக சொன்னீர்களே அதைக் காவல் துறையிடம் சொல்லிவிடுங்கள்.

நாஞ்சிலார்க்கும் அவர்களுக்கும் என்ன தொடர்பு என தெரிந்து கொள்ள விரும்பவில்லை, அவர்களுடன் தொடர்பு உண்டா என்பதை தெளிவு படுத்த வேண்டும்.

அவர் பொய் பேசமாட்டார். ஏனென்றால் அவர் அண்ணாவின் தம்பி, இப்போது தாய்க் கழகத்தில் உள்ளார்.

(பலத்த சிரிப்பு

ஆகவே நாஞ்சிலார் இரண்டொரு நாட்களில் நக்சல்பாரிகளின் பட்டியலை வெளியிடுவார் என நம்புகிறேன், அவ்வாறு சொல்லுவது நாட்டுக்கு நல்லது, அவர் பாராளுமன்ற உறுப்பினராகவும நிதியமைச்சராகவும் இருந்தவர் என்ற முறையிலும் நான் முதல்வர், உள்துறை அமைச்சர் என்ற முறையிலும் அவரிடம் உள்ள நக்சல்பாரிகளின் பட்டியலை காவல் துறையிடம் அளிக்க வேண்டும் எனக் கேட்டுக்கொள்கிறேன். அல்லது உள்துறைஅமைச்சராக உள்ள என்னிடம் தெரிவிக்கலாம்.

திருப்பி திருப்பி நான் சொல்லிக் கேட்பதை அவர் புரிந்துகொள்ள வேண்டும் எனக் கேட்கிறேன்.

அராஜகவாதிகளின் முகவரிகளை, நாஞ்சிலார் தந்துவிடுவார் என நம்புகிறேன்.

பத்திரிகை நண்பர்கள் மூலமாக நாஞ்சிலாருக்குப் போய்ச் சேரும்.

#### அதிகாரிகள் போவார்கள்

அப்படிச் சேர்ந்த பிறகாவது அவர் நக்சல்பாரிகளின் முகவரியை அவர் தந்து விடட்டும்.

அப்படியும் தராவிட்டால், அதன் பிறகு அதிகாரிகள் போவார்கள். போய்முறைப்படி தெரிந்து கொள்வார்கள்.

பகுத்தறிவை வளர்க்க பள்ளிகள்மட்டும்போதாது. பத்திரிகைகளும் வேண்டும் அந்த வகையில் கடந்த தேர்தலின்போது அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தையும் ஆதரிக்கும் வகையிலும், இந்திரா காங்கிரசுக்கு பாதகமாக இல்லாத முறையிலும் கம்பியில் நடக்கும் சர்க்கஸ்வித்தைக் காரரைப்போல மிகவும் திறமையாக 'மக்கள் குரல்' பத்திரிகையை நடத்தியதற்காக டி. ஆர். ஆரையும், சண்முகவேலையும் பாராட்ட வேண்டும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

விழாவுக்கு வந்த முதல்வர் புரட்சித்தலைவரை டி ஆர் ஆர் சண்முகவேலு ஜீவானந்தம் மதுரை 'மக்கள் குரல்' செய்தி ஆசிரியர் ராஜாராம், சித்தரஞ்சன் ஆகியோர் வரவேற்றனர்.

---

# தமிழ் தியாகிகளின் பிள்ளைகளுக்கு மருத்துவ கல்லூரியில் இட ஒதுக்கீடு

சென்னை, செப்,12 முதல்வர் புரட்சித்தலைவர் விருப்பப்படி தமிழ் தியாகிகளின் பிள்ளைகளுக்கு எம் பி பி எஸ் படிப்பில் 3இடங்கள் ஒதுககீடு செய்யப்பட்டுள்ளதாக அமைச்சர் ஹண்டே கூறினார்.

சென்னையில் தலைமைச் செயலகத்தில் மக்கள் நல் வாழ்வுத்துறை அமைச்சர் டாக்டர் எச் வி ஹண்டே நிருபர்களுக்கு பேட்டியளித்தார்,

அப்போது அவர் கூறியதாவது:-

மருத்துவக் கல்லூரியில் இடம் பெறுவதற்காகஇதுவரை இருந்த சில முறைகள் மாற்றப்பட்டுள்ளன. பி.எஸ்.சி. பட்டம்பெற்றவர்கள் இடம் பெறுவதற்கு இதுவரை தனி ஒதுக்கீடு இருந்து வந்தது. இனிமேல் அந்த முறை இருக்காது. ஒரே தரமாக கருதப்படும்.

மருத்துவக் கல்லூரியில் காலியாக உள்ள இடங்கள்மொத்தம்1042 ஆகும்.

மொத்தம 12548 விண்ணப்பங்கள் வந்துள்ளன. இவற்றில் 2059 விண்ணப்பங்கள் தகுதியற்றவையாக இருந்தன மீதியுள்ள 10489 விண்ணப்பங்கள் ஏற்றுக் கொள்ளபபட்டு இவற்றுக்கு வரும் 15-ந் தேதயன்று நேர்முகத் தேர்வு நடைபெறுகிறது. இரணடு வாரகாலம இந்த தேர்வு நடைபெறும்.

சென்னையில் 3 இடங்களிலும் மதுரையில் ஒரு இடத்திலும், தஞ்சை, நெல்லை, கோவை ஆகிய இடங்களில் ஒவ்வொரு இடத்திலுமாக மொத்தம் 7 இடங்களில தேர்வு நடைபெறும்.

கடந்த முறைமொத்தம் 5077 விண்ணபபங்கள் வந்தன இநத அண்டு இருமடங்காக ஆகியுள்ளது.

உடல் ஊனமுற்றவர்களுக்கு3 இடமும் விதவைகளுக்கு 10 இடமும் ராணுவத்தினரின் குழந்தைகளுக்கு 6 இடமும் கலப்பு திருமண தம்பதிகளின் குழநதைகளுக்கு 6இடமும் விளையாட்டில் சிறந்தவர்களுக்கு 3 இடமும், சுதந்திரப் போராட்ட தியாகிகளின்குழந்தைகளுக்கு ஒரு இடமுமதமிழ்வளாக்கபாடுபட்ட தியாகிகளின் குழந்தைகளுக்கு 3 இடமும ஒதுக்கப்பட்டுள்ளது.

முதல்வர் புரட்சித்தலைவரின் விருப்பப்படி தமிழ்த் தியாகிகளின் குழந்தைகளுக்கு முதன் முறையாக இந்த ஒதுக்கீடுசெய்யப்படுகிறது.

மத்திய அரசின் நியமனத்திற்கு 9 இடமும் ஜம்முகாஷமீருககு 4 இடமும் நேபாளத்திற்கு 2 இடமும் ஆந்திரத்திற்கு 2 இடமும் கருநாடகத்திற்கு 2 இடமும் இலங்கை பர்மா அகதிகளுக்கு 5 இடமும் இங்கிருந்து வெளிநாட்டில் சென்று, தங்கியுள்ளவர்களுக்கு 20 இடமும் பிற்பட்டவாகளுக்கு 50 சதவிகிதமும், தாழ்த்தப்பட்டவர்களுக்கு 18 சதவிகிதமும் மீதமுள்ள 32 சதவிகிதம் பொது இடமாகவும் ஒதுக்கப்பட்டுள்ளது. எம.பி.பி.எஸ். அட்மிஷன் அக்டோபா மாதம் நடைபெறும்.

எம் டி., எம்.எஸ்., ஆகிய மருத்துவ பட்டப் படிப்பு சமபந்தமாக இருவா வழக்குத் தொடர்ந்திருக்கின்றனா.

இந்தத தேர்வு நாங்கள் ஆட்சியில் இருந்தபோது நடந்ததல்ல ஜனாதிபதி ஆட்சியில் நடைபெற்றதாகும்.

நாங்கள் ஆட்சிக்கு வநதவுடன அபபடியே வெளியிட்டு விட்டோம. நாங்கள் அதை ஆராயநதிருந்தால அதற்காக தனி கமிட்டி போடவேண்டியிருந்திருக்கும்.

மேலும் இது ஒரு மாநிலத்தின் கவுரவப் பிரச்சினை என்பதால் தான் வழக்கில் அரசு வாதாடியது

நீதிபதியின் தீர்ப்புக்குக் கட்டுப் படுகிறோம் நீதி மன்றத்தின் தீர்ப்பைஎதிர் பார்க்கிறோம்

இவ்வாறு அமைச்சர் டாக்டர் ஹண்டே கூறினார்.

---

மோசடி:

### ஊர்க்காவல் படை அதிகாரிகட்கு தண்டனை

சென்னை, செப். 12- ஊர்க்காவல் படையைச் சேர்ந்த அதிகாரிகளான சரபோஜி, சாமுவேல் ஜெயராஜ் ஆகியோர் ஊர்க்காவல படையினருக்கு அளிக்கும் துணிகள் பூட்ஸ்கள் போன்றவைகளுக்காக அளிக்கப்பட்ட தொகையில் 71 ஆயிரத்து 702 ரூபாய் கையாடல் செய்தார்களாம்.

இதையடுத்து இவர்கள் மீது சைதாப்பேட்டை 4வது கோர்ட்டில் வழக்கு தொடரப்பட்டது.

வழக்கை விசாரித்த நீதிபதி மீனாட்சிசுந்தரம் சரபோஜிக்கு 2வருடகடுங்காவல் தண்டனையும், சாமுவேல்,ஜெயராஜுக்கு 15மாத கடுங்காவல் தண்டனையும் அளித்துத் தீர்ப்புக் கூறினர்.

---

(8ம் பக்க தொடர்ச்சி)

பணி நிறைவேற்றி முடிக்கப்படும்.

1980-81-ம் ஆண்டுக்கென 8 கோடி ரூபாய் சாலை பராமரிப்பு பணிக்கு செலவிடப்படுகிறது. தற்போது சுமார் 5 கோடி ரூபாய் வரை செலவிடப்பட்டுள்ளது.

பிரதான சாலைகள் மட்டுமின்றி சிறிய இணைச்சாலைகளுக்கும் பராமரிப்புகவனம்செலுத்தப்படும். சாலைகளில் தண்ணீர் தேங்காமல் வடிந்து விடக்கூடிய அளவில் வடிகால் வசதிகள் செய்ய நடவடிக்கைஎடுக்கபடும்,

மாநகராட்சி தற்போது போடும் வரவு செலவு கணக்கு 50 கோடி ரூபாயாக உயர்ந்தால் தான் நல்ல சிறப்பான திட்டங்களை தீட்டி செயல்படுத்த முடியும்.

சென்னை மாநகராட்சியின் வருவாயைப் பெருக்குவதற்காக ஆக்ட்ராய் வரி போன்ற வரிகள் வசூலிக்க மாநகராட்சி பரிசீலித்து வருகிறது.

இவ்வாறு அமைச்சர் குழநதைவேலு கூறினர்.

அப்போது மாநகராட்சி ஆணையர் சிவசுப்பிரமணியம் மற்றும் அனைத்து துறை அதிகாரிகளும் உடன் இருந்தனா.

---

அமைச்சர் குழந்தைவேலு பேட்டி:

# சென்னை நகரில் ரூ3½கோடிசெலவில் 9 தியேட்டர்கள்

மாநகராட்சி கட்டுகிறது

சென்னை, செப். 12- சென்னை நகரில் 9 இடங்களில் மூன்றரை கோடி ரூபாய் செலவில் மாநகராட்சி குளு குளு சினிமா தியேட்டர்களை கட்ட இருப்பதாக அமைச்சர் குழந்தைவேலு தெரிவித்தார்.

தமிழக உள்ளாட்சித் துறை அமைச்சர் பா. குழந்தைவேலு நிருபர்களுக்கு பேட்டியளித்தார்.

சென்னை மாநகராட்சி அலுவலகத்தில் பத்திரிகையாளா சந்திப்பின்போது அவர் கூறியதாவது:-

சென்னை மாநகராட்சியின் பல்வேறு திட்டங்களை தீட்டி நிறைவேற்றுவதற்குத் தேவையான நிதி வருவாயைத்திரட்ட நகரில் பல்வேறு இடங்களில் ஒன்பது குளுகுளு வசதியுள்ளதிரையரங்குகள் கட்ட உத்தேசிக்கப்பட்டுள்ளது.

பம்பாய் மாநகராட்சியோடு ஒப்பிட்டு பார்க்கும் போது சென்னை மாநகராட்சியின் வருவாய் மிகக் குறைவு அதனால் வருவாயைப்பெருக்க இம் மாதிரி திரையாங்குகளைக் கட்ட முடிவு செய்யப்பட்டுள்ளது.

### பட்டினப்பாக்கம் அருகே...

பட்டினப்பாக்கம் ஓஷியானிக் ஓட்டல் அருகே கிரீம் சாலையில் லலித்கலா அகாடமி அருகே நந்தனம் தோழிப்பண்ணை அருகே அசோக் நகரில் ராணி அண்ணா கல்யாண மண்டபம் அருகே அண்ணா நகரில் ஐயப்பாக்காயில்பெரம்பூர ஜவகர்நகர் பெரியார்நகர் ஷெனாய் நகரில் திரு.வி.க. பூங்கா அருகே வியாசர்பாடி ஆகிய இடங்களில் அமைக்கப்படவிருக்கும் இந்த தியேட்டர்களில் சிலவற்றில் ஒரே சமயத்தில் மூன்று படங்கள் திரையிடபபடும்.

மாநகராட்சிக்குச் சொந்தமான இடங்களில் இந்த திரையரங்குகள் கட்டுவதற்கு எண்ணியுள்ளது இத் திட்டத்திற்கு மூன்றரை கோடி ரூபாய் மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது.

1980-81ம் ஆண்டு 2 கோடியே 7 லட்சம் ரூபாய் செலவில் நகரில் விளக்கு வசதிகள் செய்யப்பட்டுவருகின்றன.

அண்ணா பிறந்தநாளான செப்டம்பர் 15க்குள் 30 லட்சம் ரூபாய் செலவில் அண்ணா சாலை முழுவதும் கோடியம்வேப்பர விளக்குகள் அமைக்கபபடும்.

சென்னை நகரை அழகுபடுத்தும் திட்டத்தின் கீழ் நகரில் 20 இடங்களில் நீருற்றுக்களுடன் கூடிய பூங்காக்கள் அமைக்கப்படும். மாநகராட்சி பள்ளிகளில் சரியான பராமரிப்பு இல்லாத காரணத்தால் அவற்றை சமூகநலத்துக்கு புறம்பான செயல்களில் ஈடுபடுபவர்கள் பல்வேறு காரியங்களுக்குப் பயன் படுத்துவதை தவிர்க்க நடவடிக்கை எடுக்கப்படும்,

சென்னையில் மொத்தம் 368 பள்ளிகள் மாநகராட்சியின் கீழ் இயங்குகின்றன.

அவற்றில் எங்கெங்கு மதிற்சுவர்கள் இல்லையோ அல்லது தடுப்பு வேலிச் சுவர்கள் இல்லையோ- அங்கெல்லாம் சுவர்கள் கட்ட நிதி ஒதுக்கப்பட்டுள்ளது. வாட்ச்மேன் பணிக்கு ஆட்கள் அமர்த்தப்படுவார்கள்.

#### ரூபாய் 50 லட்சம்

இந்த பள்ளிகள் பராமரிப்பு பணிக்கு உடனடியாக 50 லட்சம் ரூபாய் செலவிடப்படும். இந்த கல்வி ஆண்டுக்குள் இந்தப்

(5ம் பத்தி பார்க்க)

---

# வருமானவரி அதிகாரிகள் போல நடித்து பெண்ணிடம் மோசடி: 4 பேர் கைது

சென்னை, செப், 12 வருமானவரி அதிகாரிகள் போல் நடித்து பெண் ஒருவரிடமும் மற்றும பல கடைகளிலும் மோசடி செய்ததாக 4பேர் கைது செய்யப்பட்டுள்ளனா,

இதுபற்றிய விவரம் வருமாறு:-

நடராஜன், இளங்கோவன், எட்வர்ட் சேவியா, ராதாகிருஷ்ணன் ஆகிய நான்கு பேரும் தங்களை வருமான வரி இன்ஸ்பெக்டர்கள் எனக் கூறிக்கொண்டு கடைகளுக்குச் சென்று கணக்குகளைச் சோதனையிடவேண்டும் என்பார்களாம். பிறகு, கணக்குகள் சரியில்லை எனக் கூறி பணம் கேட்டு பெறுவார்களாம்.

ஆகஸ்ட் 22-ந்தேதி இவர்கள் பிராட்வேயில் தையல் மிஷின் விற்பனைக் கடை வைத்திருக்கும் லட்சுமி என்ற பெண்ணிடம் சென்று வருமானவரி பாக்கிக்காக 1500 ரூபாய் பெற்றுக்கொண்டு வருமான வரி இலாகா அளிப்பது போன்ற போலி ரசீது ஒன்று கொடுத்தார்களாம்.

இதன் பிறகு இந்த நான்கு பேரும், பிராட்வே புரசைவாக்கம் தியாகராயநகர் ஆகியபகுதிகளில் கடை கடையாக சென்று பணம் வசூல் செய்ததாகவும் கூறப்படுகிறது.

கடந்த9ந்தேதி மீண்டும் லட்சுமி கடைக்கு போன் செய்துவருமானவரி பாக்கி தொகையை ஈகா தியேட்டர் அருகே வந்து தருமாறு கூறினார்கள்.

இவர்கள் பேரில் சந்தேகம் கொண்ட லட்சுமி, வருமானவரி அலுவலகத்திற்கு சென்று விசாரித்தார். இதையடுத்து இவர்களின் மோசடி தெரிய வந்தது போலீசில் புகார் செய்யப்பட்டது.

மத்திய குற்றப் பிரிவு இன்ஸ்பெக்டர் ராதாகிருஷ்ணன், சப் இன்ஸ்பெக்டர் பிரபாகர் ஆகியோர் உத்தரவின்பேரில் போலீசார் விரைந்து சென்று நடராசன இளங்கோவன், ஆகியோரை கைது செய்தனர் பிறகு இவர்கள் அளித்ததகவலின் பேரில் சேவியர், ராதாகிருஷ்ணன் ஆகியோரும் கைதுசெய்யபபட்டு, போலிரசீதுகள், சீல்கள் போன்றவை பறிமுதல் செய்யப்பட்டன.

---

Published by K. Ravindran on behalf of Thangamani Publications 75, Avvai Shanmugam salai, Madras-14 and printed by him at print House, 1, First Main Road, United India Colony, Madras 24.
Editer:
E. PARASURAMAN

# காதலியைத் தேடி காட்டுக்கு ஓடிய யானை

பத்ராசலம், செப். 12- தான் அன்புடன் நேசித்த காதலியைதன்னிடமிருந்து பிரித்ததால் மனம் வெறுத்து காட்டுக்கு சென்றது ஒரு யானை.

பத்ராசலம் ஆலயத்துக்குச் சொந்தமாக இரண்டு யானைகள் இருந்தன. அவை ஒன்றுடன் ஒன்று அன்புடன் பழகி வந்தன. எங்கு சென்றாலும் ஒன்றாகவே அழைத்துப்போவது வழக்கமாம்.

வழக்கத்துக்கு மாறாக ஒருநாள் ஆண் யானையை அதன் துணையிடமிருந்து பிரித்துவிட்டனர். அவ்வளவுதான் அது மிகவும் கோபம் அடைந்தது.

தன் அன்புக்குரியகாதலி காட்டுக்கு போயிருக்கும் எனக்கருதிய ஆண் யானை, காதலியைத் தேடி காட்டுக்கு ஓடியது.

போகும்வழியில் ஆலயத்துக்கு அருகேயுள்ள கடைகளை நொறுக்கித் தள்ளித் தனது கோபத்தை வெளியிட்டது.

ஆலய நிர்வாகிகளும் பாகனும் பதறியபடி ஓடிச் சென்றனர். ஆனால் அவர்களால் அதைப் பிடிக்க முடியவில்லை. இதுவரை அது கண்டுபிடிக்கப்படவில்லை.

'என் யானை இதுபோல் எப்போதும் இருந்ததில்லை. துணையைப் பிரிந்த சூழ்நிலையால் தன்நிலை இழந்து ஓடிவிட்டது போலும்' என்று யானைப்பாகன் கூறினார்.

## நெய்வேலியில் அண்ணா பிறந்தநாள் விழா

நெய்வேலி, செப். 12- நெய்வேலி 27வது வட்டக் கழகக்கிளை நகர எம் ஜி ஆர் மன்றம் சார்பாக பேரறிஞர் அண்ணா பிறந்தநாள் விழா இம்மாதம் 15-ந்தேதி காலை 9 மணிக்கு உடுப்பி உணவகம் அருகில் நடக்கிறது.

காலையில் நடக்கும் கழக கொடியேற்று விழாவிற்கு கே கோவிந்தராஜன் தலைமை வகிக்கிறார். டாக்டர் என் நடேசன் கொடியேற்றுகிறார்.

எஸ் பி சாதுல்லா, கே எஸ் நரசிம்மன் இனிப்பு வழங்குகின்றனர் ஜேம்ஸ் விக்டர் நன்றி கூறுகிறார்.

மாலையில் அதே இடத்தில் கழகப் பொதுக் கூட்டம் நடக்கிறது.

கே சுப்பிரமணியம் தலைமை வகிக்கிறார் நடிகர் சி எல் ஆனந்தன் எம் ராஜலட்சுமி, ஏ தங்கராசு எம்எல்ஏ, இரா கரிகாலன் மு முகமது அனிபா, ஜெனார்த்தனம், வி நாராயணன், நராசரத்தினம் கவிஞர் மு. கோவிந்தசாமி பி குப்புசாமி எம் எஸ் சர்தார் பாஷா ஆகியோர் பேசுகின்றனர்.

### அமைச்சர் டாக்டர் ஹண்டே தொடர்ந்த

## கருணாநிதி தேர்தல் ஊழல்பற்றிய வழக்கு: விசாரணை ஒத்திவைப்பு

சென்னை, செப். 12. அண்ணா நகர் தொகுதியில் (கருணாநிதி) வெற்றி பெற்றது செல்லாது என்று டாக்டர் ஹண்டே தொடர்ந்த தேர்தல் வழக்கில் எதிர்மனு தாக்கல் செய்ய கருணாநிதி நேற்று நீதிமன்றத்துக்கு வந்தார்.

நடந்து முடிந்த சட்டப் பேரவைத் தேர்தலில் தி.மு.க.தலைவர்கருணாநிதி அண்ணாநகர் தொகுதியில் 699 ஓட்டுக்கள் வித்தியாசத்தில் வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்டது. இது செல்லாது என்று கழக வேட்பாளராகப் போட்டியிட்ட டாக்டர் ஹண்டே உயர்நீதிமன்றத்தில் வழக்கு தொடர்ந்தார்.

### அதிக செலவு - வன்முறை

தேர்தலில் கருணாநிதி அதிக செலவு செய்தார். பல்வேறு பகுதிகளைச் சேர்ந்த திமுகவினர் சென்னை அண்ணாநகர் தொகுதிக்கு வந்திருந்து வன்முறையில் ஈடுபட்டனர். அத்துடன் தனக்குச் சேர வேண்டிய ஓட்டுகள் கருணாநிதிக்கு சேர்த்து எண்ணப்பட்டதாகவும் டாக்டர் ஹண்டே தன் மனுவில் குறிப்பிட்டுள்ளார்.

எனவே ஓட்டுகளை மீண்டும் எண்ண வேண்டும்- கருணாநிதி வெற்றி பெற்றது செல்லாது என்று அறிவிக்க வேண்டும்-என்று டாக்டர் ஹண்டே தன் மனுவில் குறிப்பிட்டுள்ளார்.

இந்தக் குற்றச்சாட்டுகளுக்கு பதில் அளித்து எதிர்மனு ஒன்றை தாக்கல் செய்ய கருணாநிதி நேற்று பிற்பகல் 3.30 மணிக்கு உயர்நீதி மன்றத்துக்கு வந்தார்.

தேர்தலின் போது ஹண்டே வீடு வீடாகச் சென்று ஓட்டு கேட்டது, ஒவ்வொருவரையும் பார்த்து நலமாக இருக்கிறீர்களா என்று கேட்டார் என்பது போன்ற காரணங்களால் தனக்கு ஓட்டுகள் குறைந்ததாக கருணாநிதி தனது எதிர் மனுவில் குறிப்பிட்டுள்ளார்.

இந்த தேர்தல் வழக்கு வருகிற 26-ம்தேதி நீதிபதி ராமானுஜம் முன்னிலையில் விசாரணைக்கு வருகிறது.

### லலித கலா அகாடமி வழங்குகிறது

## கலைஞர்கள் 8 பேருக்கு ரூ. 2 ஆயிரம் பரிசு

சென்னை, செப். 12- சிறப்பாக சேவை புரிந்த எட்டு கலைஞர்களுக்கு தலா இரண்டாயிரம் ரூபாய் ரொக்கப் பரிசுகளை தமிழ்நாடு லலித கலா அகாடமி வழங்குகிறது.

சி. பாலசுப்பிரமணி, கே பி சிதம்பரகிருஷ்ணன் சி. டவுக்லாஸ் பி. கோபிநாத், எஸ்.கன்னியப்பன். கே.கருணாமூர்த்தி, டி.ஆர். பி. மூக்கையா, பிரட்ரிக் செல்லப்பா ஆகியோருக்கு இந்த ரொக்கப் பரிசுகள் வழங்கப்படும்.

லலிதகலா அகாடமியின் 4-வது ஆண்டு கண்காட்சி வருகிற 21-ந் தேதி தொடங்குகிறது. அந்த விழாவில் இந்த பரிசுகள் வழங்கப்படும்.

### திண்டிவனம் பகுதியில்

## தொழிலாளர் மாநாடு: விசுவநாதன் தகவல்

சென்னை, செப். 12- தமிழ்நாடு ஒழுங்குமுறை விற்பனைக்கூட தொழிலாளர் சங்கத்தலைவரும் முன்னாள் எம். பி.யுமான சி. என். விஸ்வநாதன் பல இடங்களில் சங்கக்கொடி ஏற்றிவைத்தார்.

தென்னாற்காடு மாவட்டத்தில்மணலூர்பேட்டையில் புதிய கிளையைத் துவக்கி வைத்தார். திருவெண்ணைநல்லூரில் நடந்த கூட்டத்தில் சி. என். விஸ்வநாதன் பக்கிரி பிச்சை ஆகியோர் பேசினர்.

திருக்கோவிலூரில் புதிய தொழிற்சங்கக் கொடியை சி. என். விஸ்வநாதன் ஏற்றி வைத்தார்.

பண்ருட்டியில் சீனி ஜெயராமன் தலைமையில் ஊர்வலம் நடைபெற்றது. திருநாவுக்கரசு, லட்சுமி நாராயணன், கவுஸ், மோகன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

திண்டிவனம் பகுதியில் மாநாடு நடத்தவும் அதற்கு முதல்வர் புரட்சித் தலைவரையும் அமைச்சர் காளிமுத்துவையும் அழைக்க சங்க கூட்டத்தில் முடிவெடுத்தனர்.

தென்னாற்காடு மாவட்டத்தில் கூலி உயர்வு அளித்த புரட்சித்தலைவர் அரசுக்கு நன்றியும்பாராட்டும் தெரிவிக்கப்பட்டது.

### காலஞ்சென்ற

## நடிகர் எம். என். கே. உடல் அடக்கம்: கழக தோழர்கள் அஞ்சலி

சென்னை, செப். 12- வேலூரில் இயற்கை எய்திய நடிகர் எம் என் கிருஷ்ணன் உடல் நேற்று நல்லடக்கம் செய்யப்பட்டது கழகத் தோழர்கள் திரண்டு வந்து இறுதி அஞ்சலி செலுத்தினர்.

பேரறிஞர் அண்ணாவுடன் பல நாடகங்களில் நடித்தவரும், கழகத்தோழருமான எம் என் கிருஷ்ணன் வேலூரில் ஒலி ஒளி காட்சியில் நடித்துக் கொண்டிருந்த போது தவறி விழுந்து மரணம் அடைந்தார் அவரது உடல் சென்னைக்குக் கொண்டு வரப்பட்டது.

தலைமைக் கழகசார்பில் எம்.எஸ். அப்துல்காதர் மாலை அணிவித்து இரங்கல் தெரிவித்தார். நீரோட்டம்அடியார். நடிகமணி டி.வி. நாராயணசாமி டி. என்.சிவதாணு அ.சங்கரய்யா, சத்யாஸ்டுடியோ பத்மநாபன் தலைமைகழகம் துரை சிவசூரியன். வேதமூர்த்தி இராமையா கு. க. செல்வம், ம. சொ. ஜெயராமன், டி.என். கிருட்டிணன், ராஜய்யா, கருப்பையா மற்றும் நடிகர், நடிகைகளும், செய்தி விளம்பர இலாகாவைச் சார்ந்த கிருஷ்ணராஜ், காங்கிரஸ் கட்சியைச் சார்ந்த அய்யாவு ஆகியோரும் மலாவளையம் வைத்து இரங்கல் தெரிவித்தனர்.

இடுகாட்டில் சங்கரய்யா தலைமையில் இரங்கற்கூட்டம் நடைபெற்றது. நடிகமணி டி. வி. நாராயணசாமி, அய்யாவு டி என் கிருட்டிணன் பசுபதி ஆகியோர் மறைந்த எம் என் கிருட்டிணனுக்கு இரங்கல் தெரிவித்து உரையாற்றினர். பின்னர் அனைவரும் இரண்டு நிமிடம் மவுனமாக இருந்து அஞ்சலி செலுத்தினர்.

## பெரியவர்சங்கரய்யா நிகழ்ச்சிகள்

செப். 15, பெரியகுளம் (மதுரை மாவட்டம்) 19, 20, பெங்களூர்.

முகவரி

அ. சங்கரய்யா
C 4/13, பூபதிநகர்
காமராசர்காலனி
கோடம்பாக்கம்
சென்னை-24

## முத்தரையர் சங்க புதிய நிர்வாகிகள்

சென்னை, செப். 12- தமிழ்நாடு முத்தரையர் சங்கத்தின் மாநிலபொதுக்குழு கூட்டம் சென்னையில் நடைபெற்றது. கூட்ட முடிவில் தலைவராக எம். வெங்கடசாமிநாயுடுவும் பொதுச்செயலாளராக எ. அய்யாசாமியும், பொருளாளராக டி. என். ஜி.சாமிநாதனும் ஒருமனதாகத்தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### மதுரை துப்பாக்கிச் சூடு

## விசாரணைக் கமிஷன் காலம் நீடிப்பு

சென்னை, செப். 11- மதுரையில் நடந்த துப்பாக்கிச்சூடுபற்றி விசாரிக்க தமிழக அரசு விசாரணைக்கமிஷன் ஒன்றை நியமித்தது. விசாரணை காலத்தை மேலும் மூன்று மாதத்திற்கு நீட்டிக்க வேண்டும் என்று கமிஷன் அரசினை கேட்டுக்கொண்டது. தன்பேரில் தமிழ்நாடு அரசு விசாரணைகாலத்தை மேலும் மூன்று மாதங்களுக்கு நீட்டித்துள்ளது. விசாரணைக்கமிஷன் தன்னுடைய அறிக்கையை 11-7-80-ஆம் நாளிலிருந்து ஐந்து மாதத்திற்குள் அரசிடம் அளிக்கும்.

ஜெப்பியாரின்...

# வசந்த அழைப்புகள்

கலர் by ஜெமினி

